

# குண்டு ரமணி

கோபால் தாஸ் வீட்டுப் பெரிய திண்ணையில் வெற்றிலை வியாபாரிகள், மோர்க்காரிகள் என்று பல பேர் இளைப்பாற உட்காருவார்கள். வேலைக்காரன் இருந்தால் விரட்டுவான், விரட்டினாலும் குண்டு ரமணி உட்கார்ந்திருந்தால் நகரமாட்டாள்.

குண்டு ரமணிக்கு எத்தனை வயசு இருக்கும் என்று சரியாகச் சொல்ல முடியவில்லை. முப்பதிலிருந்து ஐம்பதுவரை எது வேண்டுமானாலும் சொல்லலாம். அந்த வயசுக்கு இரண்டு ரமணி! பெரிய சட்டிபோல முகம். நல்ல உயரம். குழந்தைகள் சோறு தின்னப் பிடிவாதம் பிடித்தால் 'குண்டு ரமணியைக் கூப்பிடுவேன்' என்று சொன்னால் போதும், லபக்கென்று விழுங்கிவிடும்.

ரமணி மொட்டைத் தலை ஒரு மாதிரி. முள்ளாகத் தலை மயிருடன் இருப்பாள். குளிக்கவே மாட்டாள்.

தேர் முட்டியில் வரும்போது இங்கே கவிச்சி நாற்றம் அடிக்கும். ஏராளமான பூதனைபோல அவள் நடந்து வரும்போது முலைகள் தேங்காய்க் குலைபோலக் குலுங்கும். ரவிக்கை கிடையாது. சிரிக்கும் போது ஒரு பல் கிடையாது. நடந்து வருவது ஒரு மாதிரி உருள்வது போலத்தான் இருக்கும். எந்த வீட்டைத் தேர்ந்தெடுக்கிறாள் என்று சொல்ல முடியாது.

ரமணி வருகிறாள் என்ற செய்தி கேட்டதுமே படபடவென்று வாயிற் கதவை அங்கங்கே சாத்திவிடுவார்கள். அசந்து மறந்து எதாவது கதவு திறந்திருந்தால் போச்சு. திண்ணையில் வந்து உட்கார்ந்து கொண்டு விடுவாள். 'போ போ' என்றால் போகமாட்டாள். கிட்டப் போய் விரட்டவும் முடியாது. நாற்றம். எப்போதும் லேசான சிரிப்பு. ஒண்ணரைக்கண்.

"அம்பி, உள்ள போய் ஒரு தம்ளர் மோர் வாய்ண்டு வாயேன்!"

"போ, போ. ஆத்தில யாரும் இல்லை."

"ஏண்டாண்ணா பொய் சொல்றே? இப்பதான் உங்க பாட்டி உள்ள ஓடறதைப் பார்த்தேன். பெரிய்ய டபராவாயிருந்தாலும் சரி. மோர் வாய்ண்டு வந்துரு."

"தபாரு ரமணி, மோரும் இல்லை தயிரும் இல்லை. இப்பப் போப்போறியா இல்லையா?"

"மோர் இல்லாட்டா ஒரு எட்ணா காசாவது தாங்கோ மாமி."

"ஒண்ணும் கிடையாது போடின்னா."

"ரெண்டாழாக்கு அரிசியாவது வடிச்சுப் போடுங்கோ, கொஞ்சம் கசப்பு நார்த்தங்காயும் புளிச்ச மோரும் இருந்தாப் போறும்."

"இப்ப நீ போப்போறியா இல்லையா?" என்ற பாட்டி அதட்டலுக் கெல்லாம் மசியமாட்டாள். திண்ணையில் அனந்த சயனமாகப் படுத்துக்கொண்டு, "ஏண்டாம்பி எத்தனையாவது வாசிக்கறே?" என்பாள். ஒரு முறை நான் குச்சியை எடுத்துக்கொண்டு அவளை அடிக்க வந்தேன். அந்தக் குச்சியைப் பிடித்து, மளுக் என்று முறித்து, "அதெல்லாம் ப்டாதுப்பா அம்பி. மாமி, உங்காத்தில் எலவடாம் போட்டிருந்தேளே காஞ்சுபோச்சா? நாக்கு ரொம்ப ஊர்றதே! பச்சை முளகாயோட காஞ்சதும் காயாததுமா வடாம் சாப்ட்டா என்னமா இருக்கும்!"

சாப்பிடாமலும் போகமாட்டாள். அதுவும் என்ன சாப்பாடு! அவள் ஒரு கவளம் நமக்கு ஒரு வேளை. சாப்பிட்டவுடன் இஷ்டமிருந் தால் கிளம்புவாள். இல்லை, திண்ணையிலேயே யானை போலப் படுத்துக்கொண்டு ஒரு பாட்டம் தூங்கிவிட்டு, "அம்பி, காப்பி போட்டாச்சா கேளு."

அவளைக் கண்டால் எல்லோருக்கும் ஒரு வெறுப்பு, இருந்தாலும் பயமும் உண்டு. சித்திரை உத்திர வீதிகளில் எந்த வீட்டை வேண்டு

மானாலும் தேர்ந்தெடுத்து அங்கே கல்லுளி மங்கத்தனம் பண்ணி எப்போது வேண்டுமானாலும் எது வேண்டுமானாலும் தின்னும் சுகவாசி. சட்டப் புத்தகங்களே தனி. போலீஸ்காரர்களே பயப்படும் பெண் பிள்ளைக்கு சட்டம் ஏது?

மாங்கொட்டை நாணு அய்யங்கார் ஒருமுறை இவள் கொட்டத்தை அடக்குவது என்றே தீர்மானித்துவிட்டார். ரங்கு கடையில் பெரிதாக ஒரு தடவை சொல்லிவிட்டுப் போனார்: "பாரு ரங்கு, குண்டு ரமணி, குண்டு ரமணின்னு எல்லோருமே பயப்பட்டா ஆகாது. அந்த ராட்சசி கொட்டத்தை அடக்கியே தீரணும். ஒரு வாரத்துக்குள்ள அவளை ஸ்ரீரங்கத்தை விட்டு திருவானைக்காவலுக்கோ மண்ணச்ச நல்லூருக்கோ விரட்டலை எம் பேர் நாணு இல்லை" என்றார். ரங்கு 'ஓய், எவ்வளவோ பேர் முயற்சி பண்ணித் தோத்த கேஸு". ஆனானப்பட்ட புல்சூட் அய்யங்கார் வெண்டைக்கா ராமு யாராலயும் முடியலை.'

"நீ பாத்துண்டே இரேன். அவ மட்டும் எங்காத்துக்கு வந்து டேரா போடட்டும்."

மறுநாளே சொல்லிவைத்தாற்போல குண்டு ரமணி நாணு வீட்டுக்கே வந்துவிட்டாள். திண்ணையில் சப்பணம் கட்டிக் கொண்டு உட்கார்ந்து, "அடை தோசை எதாவது இருந்தா கொடுங்களேன். நாக்கு நமநமங்கறதே" என்றாள். "மாமா" என்று குழந்தைபோல நாணுவைக் குழைந்தாள்.

நாணு காத்திருந்தவர்போல, மூலையில் சார்த்தியிருந்த கிரிக்கெட் மட்டையை எடுத்துக்கொண்டு, "இப்ப நீ போறீயா, இல்லையா?" என்று படேர் என்று அவள் மண்டையில் ஒரு சார்த்து சாத்தினார்.

குண்டு ரமணியை விடக் கொஞ்சம் மாற்றுக் குறைந்த மனிதர்களுக்கு அந்த அடியில் கபாலம் உடைந்திருக்கும். ரமணி சற்று நேரம் ஸ்தம்பித்துப்போய் அடிபட்ட இடத்தில் கைவைத்துக் கொண்டிருந்தாள். நாணு அடுத்த முறை அவளை அடிக்க ஓங்கிய போது மட்டையை வாங்கி வீசி எறிந்துவிட்டு நாணுவை நெருங்கினாள். உள்ளேயிருந்த அவர் மனைவி குஞ்சம்மாள், "அய்யோ அவளோட என்னன்னா வம்பு? பேசாம சோத்தைப் போட்டுறலாம்" என்றாள். "நீ சும்மாருடி" என்று அவர் அடுத்த ஆயுதம் தேடி ஒன்றும் கிடைக்காமல் மத்து ஒன்றை எடுத்துக்கொண்டு அவளை அணுகினார். பற்றாத ஆயுதம்!

ரமணி பார்த்து சட்டி மூஞ்சி நிறையச் சிரித்து, "வாரும் கிருஷ்ணா! மத்தெடுத்துண்டு வரேள்! வாரும்" என்று நாணு சற்றும் எதிர்பாராத விதத்தில் மத்தைப் பிடுங்கி உடைத்துப் போட்டு அவரை அலாக்காகத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டாள். அப்புறம் எங்கிருந்தோ வந்த வெறியில் அப்படியே அவரைப் பந்தாடுவது போலக் கீழே எறிந்துவிட்டுப் புடவை மண்ணைத் தட்டிக்கொண்டு புறப்பட்டுச் சென்றாள்.

"உம்மை ஆயிரக்கால் மண்டபத்தில் பாத்துக்கறேன்" என்று சொல்லிச் சென்றாள்.

நாணு வெலவெலத்துப் போய் இதற்கப்புறம் இரண்டு நாள் ஜுரமாகப் படுத்திருந்தார். குஞ்சம்மாள் அவருக்கு ராத்திரியெல்லாம் தூக்கித் தூக்கிப் போடுவதாக அருணாசல டாக்டரைக் கூப்பிட்டுச் சொன்னாள்.

என் பாட்டி குண்டு ரமணியின் பூர்வகதையை ஒரு முறை சொல்லியிருக்கிறாள். அது எவ்வளவு தூரம் நிஜம் என்று சொல்ல முடியவில்லை. ரமணி சின்ன வயசில் கொடிபோல இருந்தாளாம். உரிய வயதில் கல்யாணமாகி சாந்தி கல்யாணம் எல்லாம்கூட நடந்ததாம். நாளடைவில் ஒரு பிள்ளை பிறந்ததாம். கிருஷ்ண விக்கிரகம் மாதிரி இருந்ததாம்.

அவளுக்கு உத்தர வீதியில் கணவன் வீடு இருந்ததாம். ஒருமுறை அவள் கணவன் மார்கழி மாசம் உற்சவத்தில் கன்னாபின்னா என்று சாப்பிட்டுவிட்டு கால்ரா வந்து செத்துப்போய்விட்டானாம். கணவனுடன் பிறந்தவர்கள் ரமணியை ஏமாற்றிவிட்டு சொத்தையெல்லாம் பிடுங்கிக்கொண்டு திண்ணையில் விட்டுவிட்டார்கள். அப்படியும் அவள் குழந்தையின் சுவாரஸ்யத்தில் நம்பிக்கை இழக்காமல் கணவனின் உடன் பிறந்தவர்கள் சொன்ன புரோ நோட்டுகளில் கையெழுத்துப் போட்டுக்கொண்டிருந்தாளாம். ஒருமுறை குழந்தையை அவள், 'ஆனை ஆனை அழகர் ஆனை' என்று பந்தாகத் தூக்கிப் போட்டு விளையாடிக்கொண்டிருந்தபோது கை தவறிக் குழந்தை விழுந்து மண்டையில் அடிபட்டு க்ஷண காலத்தில் பிராணனை விட்டுவிட்டதாம்.

அந்தச் சம்பவத்திலிருந்து ரமணி சித்தபிரமை பிடித்தாற்போல வீதி வீதியாய் அலைந்து திரிய ஆரம்பித்தாளாம். பரிதாபத்தால் யார் வீட்டில் என்ன கொடுத்தாலும் தின்ன வேண்டியது. யாரைக் கண்டாலும் 'கிருஷ்ணா கிருஷ்ணா' என்று கூப்பிட்டு ஆனை ஆனை விளையாடி, கிருஷ்ணனுக்குப் பசிக்கும் என்று ஜடபரதர் மாதிரி தின்ன ஆரம்பித்தாள். இஷ்டப்பட்ட வீட்டில் இஷ்டப்பட்ட திண்ணையில் தூங்க ஆரம்பித்தாள். பற்றில்லாமல் திரிந்ததில் தின்னதில் உடம்பு மலைமாதிரி விரிந்து போய் ஊளைச்சதை போட்டுப் பொதபொதவென்று ஆகிவிட்டாள். தனிக்கட்டை!

நான் இந்தக் கதையை நம்பவில்லை. பாட்டி மிகைப்படுத்துகிறாள் என்றுதான் நினைத்தேன். பாட்டி ஒரு முறை என்னை அந்தக் கதையை அவளை வைத்தே 'ரூதரிக்கிறேன்' என்றாள். ஒருமுறை குண்டு ரமணி எங்கள் வீட்டுக்கு மாமூலாக வந்திருந்தபோது அவளுக்குக் கலயத்தில் காப்பியும் பழையதும் கொடுத்து, "'ரமணி உன்னை ஒண்ணு கேக்கணுமே."

"கேளுங்கோ மாமி" என்று பாதி அழுகியிருந்த கொய்யாப் பழத்தைக் கடித்துக்கொண்டே சொன்னாள்.

"உங் குழந்தை என்னடி ஆச்சு?"

அவள் கடிப்பதை நிறுத்தாமல், "செத்துப்போச்சு மாமி" என்றாள். நிமிர்ந்து பார்த்துச் சிரித்தாள்.

"எப்படி செத்துப் போச்சு?"

'கீழே போட்டுட்டேன் மாமி.'

அடுத்து ரமணி, நான் சற்றும் எதிர்பாராத வகையில் கையில் ஒரு கற்பனைக் குழந்தையைப் பார்த்துக்கொண்டே

'வட்ட நடுவே வளர்கின்ற மாணிக்க
மொட்டு நுனியில் முளைக்கின்ற முத்தேபோல்
சொட்டுச் சொட்டென்னத் துளிக்கத் துளிக்க என்
குட்டன் வந்தென்னைப் புறம்புல்குவான்
கோவிந்தன் என்னைப் புறம்புல்குவான்'

என்று மிக இனிய குரலில் கற்பனைக் குழந்தையை முதுகில் சாய்த்து ஆடிக்கொண்டே பாடினாள் அந்த ராட்சசி.

என்னைப் பார்த்துக் கண்களில் கண்ணாடிபோல ஜலம் திரையிடச் சிரித்தாள்.

1983